உ

சிவமயம்

# அகத்தியர் தோத்திரக் கொத்து

(அம்பை அகத்தீச்சுரர் கோயில் கும்பாபிடேக மலர்)

பதிப்பாசிரியர் :

அம்பாசமுத்திரம் - அருள்திரு. சுவாமிநாத சற்குரு

அவர்கள் மாணவர்

**வித்துவான் அம்பை. இரா. சங்கரனார்,**

தலைமைத் தமிழாசிரியர், பச்சையப்பன் கல்லூரி

உயர்நிலைப்பள்ளி, சென்னை-1

அம்பாசமுத்திரம்,

**திரு. சிவ. ராம. அ. நடராஜ முதலியார் அவர்கள்**

வெளியீடு.

சோபகிருது௵ தை௴ 13-ஆம் நாள் (26-1-'64)

உ

சிவமயம்

# அகத்தியர் தோத்திரக் கொத்து

## (அம்பை அகத்தீச்சுரர் கோயில் கும்பாபிடேக மலர்)


பதிப்பாசிரியா :

*அம்பாசமுத்திரம்* - **அருள்திரு. சுவாமிநாத சற்குரு**

*அவர்கள் மாணவர்*

**வித்துவான் அம்பை. இரா. சங்கரனர்,**

*தலைமைத் தமிழாசிரியர், பச்சையப்பன் கல்லூரி*

*உயர்நிலைப்பள்ளி, சென்னை-1*



அம்பாசமுத்திரம்,

**திரு. சிவ. ராம. அ. நடராஜ முதலியார் அவர்கள்**

**வெளியீடு.**

*சோபகிருது௵ தைமீ* 13-ஆம் *நாள்* (26-1-'64)

# முகவுரை

சித்திக்கு வித்தாகி விளங்கும் இச் செந்தமிழ் நாட்டில் சித்தர்களும் முனிவர்களும் நிறைந்து தங்கள் அருள் திருவிளை யாடல்களை யெல்லாம் ஆங்காங்கு இறைவன் திருவருள் துணை கொண்டு செய்து மக்களை யாட்கொண்டிருக்கின்றனர். அத் தகையவர்களுள் அகத்தியர் ஒரு சிறந்த இடத்தை—என்? தலையாய இடத்தையே—பெற்றவர் என்பதில் சிறிதும் ஐய மில்லை.

"வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி அதற்கிணை யாத் தொடர்புடைய தென்மொழியை" இறைவனே குட முனிக்கு வலியுறுத்திக் கூறி இவ்வுலகில் பரவச் செய்தார் என்று நம் புராணங்கள் கூறுகின்றன. அதனாலேயே பல புராணங்களிலும் பல தெய்வங்களுக்குத் துதிகள் கூறும்போது "தமிழாசிரியர் துதி" என்ற ஒரு பகுதியில் அகத்தியரைத் துதிக்கும் மரபு ஏற்பட்டுள்ளது. தமிழாசிரியர் என்றாலே அகத்தியர்தான் என்று பல புராண ஆசிரியர்களும் கருதிப் போற்றத்தக்க நிலையில் அகத்தியர் முதலிடத்தைப் பெற் றுள்ளார்.

மேலும் நம் சமயத்தில் "அடியார் வழிபாடே சிறந்த வழி பாடு. இறைவனடியாரை இறைவனாகவே கருதி வழிபட வேண்டும்" என்ற அடிப்படைக் கருத்து யாண்டும் நீக்கமற நிறைந்திருப்பது வெளிப்படை. அந்நிலையிலேயே பல அடியார் பெருமக்களுக்கும் கோயில் எழுப்பிப் போற்றி வணங்குகின் றோம். அதே போன்று அகத்திய முனிவருக்கும் கோயில் எழுப்பி வழிபட்டு வருவது முறையே யாகும்.

அகத்தியர் யார்? என்ற வினாவை யெழுப்பித் தத்தம் மனம் போன போக்காகப் பலவாறு விடையும் கூறி அமைதி

கொள்ளும் அறிஞர்கள் பலருளர். அகத்தியர் யாவராயினு மாகுக. "அவர் சிறந்த முனிபுங்கவர். இறைவனிடத்துப் பேரன்பு கொண்டவர். 'நமை நிகர் ஒருத்தன் உள்ளான். அவன் நலத் தமிழ் முனியாம் அகத்தியனே' என்று இறை வனே போற்றத் தக்க நிலையில் பெருமைகொண்டவர். இவ் வுலகத்தில் தமிழைப் பரப்பிப் பல தமிழ் நூல்களையும் எழுதிய வர். தமிழாசிரிய உலகத்துக்கே முதலாசிரியரென இருந்தவர். பொதிய மலையை இடமாகக் கொண்டவர்," என்பவைகள் ஐயத்திற்கிடமேயில்லை. மற்று அவர் பிறந்தது, வந்தது, காலம் முதலியவைகளை யெல்லாம் ஆராய்ச்சிக் கண்கொண்டு ஆய்வார் ஆய்க. அது கிடக்க,

அவ்வகத்தியப் பெருமானுக்குத் தமிழகத்தில் பல கோயில் கள் உள்ளன. அவைகளுள் ஒன்று திருநெல்வேலி மாவட்டத் தில் அம்பாசமுத்திரத்திலும் இருக்கின்றது. இக்கோயில் பன்னூறு ஆண்டுகட்கு முன்னரே இங்குள்ளது என்பதும் இவ்வூரிலுள்ள செங்குந்தப் பெருமக்கள் ஆட்சியின்கீழ் இது இருந்து வந்திருக்கின்றது என்பதும் தெளிவு. 'அகத்தியமா முனிவர் சரித்திரம்' என்ற ஒரு நூலும், 'அகத்தீச்சுரர் தோத் திரப் பதிகம்' என்ற ஒரு நூலும் இந்நூற்றாண்டின் தொடக்கத் தில் அச்சுவாகன மேற்றப்பட்டு அவை கிடைத்தற்கருமை யாயினமையின் 11-4-1957ல் மீண்டும் என்னால் பதிப்பிக்கப் பெற்றன. அந்நூல்கள் வாயிலாயும் இக் கோயிலுக்கும் செங்குந்தப் பெருமக்களுக்கும் உள்ள தொடர்பு தெற்றென விளங்கும். இக்கோயில் மிகப் பழமை வாய்ந்ததாயினும் கொல்லமாண்டு 1085 ஆனித்திங்கள் 11ஆம் நாள் (25–6–1910) ஒரு கும்பாபிடேகம் நடந்திருக்கிறது.

மணிதுன்று நெடுமாட மலிகின்ற அம்பையெனு
மாநகரில் வழிவழியதாய்
வளர்கின்ற செங்குந்த முதலியர்தம் முன்னோர்கள்
வரன்முறையு வந்துபோற்றும்

கணிகொள் தமிழ் முனிவரொடு புதுமையின மைத்தஅருட்
கண்ணிலோ பாமுத்திரை
கந்தனிரு காதலியர் நந்திமயில் மீனுட்சி
கருதுதுவ சாதிகட்கும்
அணிகொல்லம் ஆயிரத் தெண்பத்தி னைந்தானி
ஆனபதி னொருதெய்தியில்
ஆந்துதிகை வெள்ளிஉத் திராடார நாழிகை
அறுநான்கு முக்காலின்மேல்
துணியுநா லேழினுள் இடபலக் கினம்பெற்ற
சுபமான வேளை தன்னில்
தூயட்ட பந்தனம் கும்பாபிஷேகமும்
தொன்முறை நடத்தினுரே.

என அக்காலத்து அம்பாசமுத்திரம் தீர்த்தபதி உயர்நிலைப் பள்ளியில் தமிழ்த் தொண்டாற்றி வந்த திரு. அரிகரபாரதியார் அவர்கள் அருளிச் செய்த செய்யுளையும் நோக்குக. அக்குட முழுக்கு நிகழ்ந்து 54 ஆண்டுகள் ஆகின்றன. ஆகையால் தற் போது இத்திருக்கோயிலில் வடக்கு வாசற் கோபுரம், சுவாமி, அம்பாள் விமானங்கள், புளியடி அகத்தியர் ஆகிய மூர்த்திகளின் புனர் நிர்மாணங்கள் முதலியன செய்யப்பெற்று நன்முறையில் குடமுழுக்கு செய்ய வேண்டுமென்று பல பெருமக்கள் நினைத்த னர். அம்முறையில் 26-1-64ஆம் நாளாகிய நம் இந்தியக் குடியரசாட்சி கைவரப்பெற்ற 14ஆம் ஆண்டுக் கொண்டாட்ட நாளாகிய இன்று குடமுழுக்கு மிகச் சிறந்த முறையில் நிகழ் கின்றது. அந் நன்னுளாம் இன்றே அகத்தியர் திருவருளால் இந்நூலும் வெளிவருகின்றது.

அம்பாசமுத்திரம் என் கெழுதகை நண்பர் உயர்திரு. சிவ. ராம. அ. நடராஜ முதலியார் அவர்கள் இக்கும்பாபிடேக நினைவு மலராக அகத்தியரைப் பற்றிய துதிகளை யெல்லாம் ஒரு சேரக் கோத்து ஒரு நூல் வெளியிட வேண்டுமென்று கருதினர்கள். இது மிகவும் வரவேற்கத்தக்கது என்று கருதி

னேன். 'சிவபுராணஸ்தோத்திர மஞ்சரி' என்ற ஒரு நூலைப் பல்லாண்டுகட்கு முன்பே இந்நோக்குடனேயே பொம்மபுர ஆதீனம் சிவஞானபாலய சுவாமிகளின் சீடர்களுள் ஒருவராய சிதம்பரம் ஈசானியமடம் இராமலிங்கசுவாமிகள் வெளியிட்டுள்ளார்கள். அதில் அகத்தியரைப் பற்றிய துதிகளாக எட்டுப் பாடல்களே உள. ஆகவே பல நூல் நிலையங்களையும் துருவிப் பார்த்துப் பல தலபுராணங்களிலுமிருந்தும் பாடல்கள் சேகரிக்க வேண்டி வந்தது. அவ்வாறு பார்த்துச் சிறந்த பாடல்களாகப் பல பாடல்களை 'அர்ச்சனை பாட்டேயாகும்' என்ற கருத்தின் படி அர்ச்சனைக்கேற்ற முறையில் தொகுத்துப் பதிப்பித்துள்ளேன். நூலின் பெயர்களும் ஆசிரியர் பெயர்களும் அவ்வப் பாட்டின் முன்னும் பின்னும் குறிக்கப்பட்டுள்ளன. ஆசிரியர் பெயர் தெரியாத பாடல்களை அப்படியே பதிப்பித்துள்ளேன். நம் தண்டமிழில் எவ்வெப் புராண நூல்களுள்ளன, அவற்றை யியற்றிய பண்டையாசிரியர்கள் யாவர் என்பனவற்றையெல்லாம் சிறிது சிறிதாக மக்கள் மறந்து வருமிக்காலத்து அவைகளையும் நினைவுறுத்துவான் வேண்டியே இக்குறிப்பை எழுதலானேன். தளையும் ஓசையும் கெடாத நிலையில் பாடல்களைக் கூடியமட்டும் பிரித்தே அச்சிடச் செய்துள்ளேன்.

இப் பாக்களைச் சேகரிக்க உதவிய சென்னை மறைமலையடிகளார் நூல் நிலையம், எழும்பூர் அரசியலார் நூல் நிலையம் (Record Office), திருவான்மியூர் டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் நூல் நிலையப் பொறுப்பாளர்கட்கும், இதற்குறுதுணையாயிருந்த நண்பர்கள் திரு. கார்வண்ணனார், திரு. இராசேந்திரனார் முதலியவர்கட்கும், இதனை நன்முறையில் அச்சிட்டு உரிய காலத்தே உதவிய முருகன் அச்சக உரிமையாளர் என் அருமை நண்பர் திரு. மு. நாராயணசாமி அவர்கட்கும் என் நன்றி உரியதாகுக.

இந்நூலினை மக்கள் வாசித்துப் பயன்பெறுவதோடு வருங் கால சமுதாயமாகிய இளைய உள்ளங்களையும் இதுபோன்ற

பக்தி நூல்களைப் படிக்கத் தூண்டின் இறையருள் கிட்டும். உலகமும் மேம்பாடுறும். அதற்கு அகத்தீச்சுரர் இன்னருள் பாலிக்கவேண்டி அவரடிகளையே வணங்கி அமைகின்றேன்.

'' அம்பையகம் ''
கோவிந்தன் சாலை,
மேலை மாம்பலம்,
சென்னை-33
24-1-'64

இன்னணம்
**இரா. சங்கரன்**

---

## அம்பைத் தல புராணம்

அகத்திய முனிவன்போலும்
ஆன்றஓர் முனியும் தெய்வ
மகத்துவத் தமிழேபோல
மற்றொரு பாடைதானும்
மிகுத்தசெங் குந்தர்போல
வேறொரு சாதியாரும்
சகத்தினில் அம்பைபோலும்
நகரமும் சாற்றற்குண்டோ.

—அரிகர பாரதியார்

# குடமுழுக்கு நாள்

## பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

சீரோங்கு அம்பையினில் செல்வமலி செங்குந்தர்
சிறப்பாகப் போற்றிவருநல்
செம்மைபுரி அகத்தியர் கோயிலிற் கோபுரம்
விமானமும் செப்பனிட்டு
பாரோங்கி வாழவே நிகழ்கொல்லம் ஆயிரத்
தொருநூற்று முப்பதோன்பான்
சோபகிரு தாண்டுதை பதின்மூன்று ஞாயிறு
சோன்மிருக சீர்ஷநாளில்
ஏரோங்கு மீனநல் லோரையோ டினிதுற்ற
எழில்நாழி எட்டுமுக்கால்
மேலதா மாகும்ப அபிடேகம் யாவரும்
மாண்புற நடத்தினரே
நாரோங்கு சிந்தையோடு நம்முலக மின்பமுற
நாளுமே பக்தியுடனே
நல்லவர்கள் மெச்சிடும் நம்பனின் னடியவர்கள்
கற்குந்தப் பெருமக்களே.

—வித்துவான் - அம்பை. சங்கரனார்

உ

சிவமயம்

# அகத்தியர் தோத்திரக் கொத்து

## விநாயகர் வணக்கம்

*மண்ணுல கத்தினில் பிறவி மாசற*
*எண்ணிய பொருளெலாம் எளிதின் முற்றுறக்*
*கண்ணுதல் உடையதோர் களிற்று மாமுகப்*
*பண்ணவன் மலரடி பணிந்து போற்றுவாம்.*

## நூல்

*சந்தனப் பொதியத் தடவரை செந்தமிழ்ப்*
*பரமா சாரியன் பதங்கள்*
*சிரமேற் கொள்ளுதும் திகழ்தரற் பொருட்டே.* 1

—தொல்காப்பிய உரை

## மகா தாம்பிரவர்ணி தல புராணம்

*வாருதி உண்டவன் பொதிகை மாமுனி*
*சீர்பெறு செந்தமிழ் சிறந்த சிந்தையான்*
*ஆர்புறு விந்தம தடக்கு மங்கையான்*
*ஏர்பெறு மலரடி யிறைஞ்சி யேத்துவாம்.* 2

—சங்கரலிங்கம் பிள்ளை

## கந்த புராண வெண்பா

சங்கரியைச் சங்கரனைத் தாபித்தோன் சற்குருவாம்
சங்கரிசேய் தன்கதைக்குள் சார்ந்தருளும்—சங்கரிநேர்
முத்தமிழ் தந்த முனியலைவீழ் பன்மொழிசேர்
முத்தமிழ் தந்த முனி. 3

... ... ...

## திருக்கச்சூர் ஆலக்கோயிற் புராணம்

விந்த மாமலை வேலை யிரண்டையுங்
கந்த மாமலர்க் கையில் அடக்கினேன்
சந்த மார்தமிழ் தன்னை இயலுறத்
தந்த மாதவன் தாள்முறை சாற்றுவாம். 4

—வெண்பாப்புலி - வேலுசாமிப் பிள்ளை

## கோட்டூர்ப் புராணம் (சிருங்கபுரம்)

சகத்தைச் சூழ்தரு சந்திரா தித்தர்முன்
னுகத்தில் போக்கற ஓங்கிய விந்தமா
நகத்தைத் தாழ்த்தித்தென் நற்றமி ழிற்கியல்
அகத்தி யத்தை அளித்தவற் போற்றுவாம். 5

—தஞ்சாவூர் - சதாவதானம் சுப்பிரமணிய ஐயர்

## திருக்குறுக்கைப் புராணம்

பழையகாப் பியக்குடியோன்
பனம்பாரன் முதலானோர்
விழையநூல் திறமுழுதும்
விரித்துரைத்துக் குரவுபூண்
டுழையவா மதர்நெடுங்கண்
உலோபாமுத் திரையொடுமண்
தழையமா மலயம்அமர்
தமிழ்முனிபொன் தாள்தொழுவாம். 6

—திரிசிரபுரம் - மீனாட்சிசுந்தரம் பிள்ளை

## திருவாளொளிபுற்றூர்ப் புராணம்

அளிவி டுத்தவ றக்கடை துஞ்சிட
ஒளிவி டுத்தவொ ருகட லுட்கொடு
தெளிவி டுத்தவொ ருசெந்த மிழ்க்கடல்
வெளிவி டுத்தமு னிவனை வேண்டுவாம். 7

## உறையூர்ப் புராணம்

உயிர கஞ்செறி யவித்தையா மிருள்முழு தொழித்துச்
செயிரி லாப்புகழ்க் கிரணமெங் கணுஞ்செலச் செலுத்தி
வயமி குந்தமிழ்ச் செங்கதிர் உதித்திட வாய்த்த
பயமி குங்குணக் குன்றமாம் அகத்தியற் பணிவாம்.

## வீரவனப் புராணம்

நள்ளுபு வருந்தும் வானோர் படுந்துயர் நாசம் செய்வான்
உள்ளுபு கடல்நீர் முற்றும் ஓர்உழுந் தளவைத் தாக
அள்ளுபு பருகிக் கங்கை யாற்றினை அடக்கி வண்சீர்
எள்ளுபு பொலியும் சீர்பெற் றிருப்பவன் துணைத்தாள் போற்றி.

## மண்ணிப்படிக்கரைப் புராணம்

உமைநிகர் ஒருத்தி யுள்ளாள்
உலோபாமுத் திரையே யன்னாள்
நமைநிகர் ஒருத்தன் உள்ளான்
நலத்தமிழ் முனியே யன்னான்
இமையவர் அறிமின் என்று
எந்தையே அருளிச் செய்யக்
கமைமிகு தவப்பே றுற்றார்
கழலிணைக் கன்பு செய்வாம். 10

—திரிசிரபுரம் - மீனாட்சிசுந்தரம் பிள்ளை

## தனியூர்ப் புராணம்

நலர்தொழும் பொதியஞ் சார்வா ணடவையுற்
றியங்கும் போதே
வலர்தொழு மருண்மூழ் காது மருளூற
மூழ்க லுற்ற
சிலர்தொழுந் தான முண்மை தெளிந்தமா
தவத்த ராய
பலர்தொழுந் தான மாகப் பண்ணினேன்
பாத முள்வாம். 11

## திருப்பெருந்துறைப் புராணம்

நெடுமை குறுமை யுயர்பிழிவை
நிரலே யவற்றிற் கெதிர்மறையாப்
படுமேன் மையினிற் செயவல்லான்
பரவை யுணலான் மிக்குயர்ந்து
விடுதென் றிசையைச் சமஞ்செயலால்
வெற்பை யரத்துள் அழுத்துதலால்
கொடுவின் மாலேச் சிவஞ்செயலால்
என்னும் முனிதாள் குறிக்கொள்வாம். 12

## மாயூரப் புராணம்

மயிலேநிக ரஞ்சாயன் மங்கையொடு
மருள்பரப்பி வானோர் சூழக்
கயிலேயமர் பெருமானில் உலோபாமுத்
திரையெனும்பேர்க் கற்பு வாய்ந்த
குயிலேயடு மொழியொடுஞ்செந் தமிழ்பரப்பி
முனிவர்குழாங் குலவிச் சூழ
வெயிலேவிடு மணிப்பொதியத் தமருமொரு
முனிவரன்தாள் மேவி வாழ்வாம். 13

—திரிசிரபுரம் - மீனாட்சிசுந்தரம் பிள்ளை

## திருநாகைக்காரோணப் புராணம்

வெற்புமேக் கெழில்த விர்ப்பான் மென்மலர்க்
கையு ளொன் று
பொற்புமே வுறம றித்துப் பொலங்கழல்
ஒருதாள் ஊன் றி
வற்புமே வுறத்த விர்த்த மாதேவ
னினுஞ்சீர் வாய்ப்புற்
றற்புமே வுறத்தென் பால்வெற் பமர்பவர்க்
கடிமை செய்வாம். 14

## கண்டதேவிப் புராணம்

பன்னிரு தடங்கைச் செம்மல்
பால்சிவ ஞானம் பெற்றுப்
பன்னிரு கதிரும் ஒன்ரும்
பான்மையின் விளங்கி நாளும்
பன்னிரு தவமா ஞைக்கர்
பழிச்சிட மலையம் மேவப்
பன்னிரு சரணம் நாளும்
தலைக்கொடு பரவு வோமே. 15

## திருக்குடந்தைப் புராணம்

தம்பத்தே உதித்தான் முன்னோர்
தடங்கரம் கூப்பு மாறே
கம்பத்தேய் எனக்கொள் எங்கள்
கண்ணுதல் பரமன் போலக்
கும்பத்தே உதித்துச் செய்ய
தமிழ்ப்பெருங் குரவும் பூண்டு
நம்பத்தே முதவும் தெய்வ
முனிவனை நயந்து வாழ்வாம். 16

—திரிசிரபுரம் - மீனாட்சிசுந்தரம் பிள்ளை

## காசி ரகசியம்

ஒருமலை பிலத்து வீழ
உரறிமிக் கார்த்துப் பொங்கி
வருமலை வயிற்றுச் செல்ல
மலர்கரம் கவித்திட் டேற்றுப்
பொருமலை ஒழிந்தோம் என்று
புவிமகள் களிப்பத் தென்னந்
திருமலை அமரும் தெய்வச்
செம்மலை வணக்கம் செய்வாம். 17

## சூரைமாநகர்ப் புராணம்

அறவினை யாதெ னிற்கொல் லாமையென் பதற்கு மாறு
மறவினை புரிவா தாவி வில்வலன் உயிரை மாட்டி
அறவினை கோற லானும் அமையுமென் றகிலம் தேற்றி
மறவினை கடிந்த தெய்வ முனிவனை வணக்கம் செய்வாம்.

## கோயிலூர்ப் புராணம்

துன்னுபல் கருமம் சித்த சுத்தியா மாறு செய்து
மன்னுமற் றதுபெ றுது சைமினி வந்தி ரப்ப
முன்னுதண் கழனி நாதன் முழுதருள் பெற்று ஞானங்
கொன்னுமின் புறந வின்ற குறுமுனிக் கன்பு செய்வாம்.

—திரிசிரபுரம் - மீனாட்சிசுந்தரம் பிள்ளை

## திருக்காளத்திப் புராணம்

விந்தகிரி யொன்றடக்கி வேதமொரு நான்கடக்குஞ்
சிந்தைதனின் ஐந்தடக்கிச் சிறுகரகத் தாறடக்கி
வந்துகட லோரேழும் வயிற்றடக்கிப் பொன்முகரி
முந்துதவத் தாற்கொணர்ந்த முனிவனடி முடிபுனைவாம்.

—வீரைநகர் - ஆனந்தக்கூத்தர்

## வயிரவன் கோயில் புராணம்

*தேவ தேவனுர் திருவுளக் குறிப்பினுக் கிசைந்து*
*பாவ கற்பொரு மணிகிளர் பனிவரை ஒருவிப்*
*பூவர் சந்தனம் செந்தமிழ் மணங்கமழ் பொதியின்*
*மேவ கத்திய முனிவனை வெஃகுதல் அஃகாம்.* **21**

**—சேந்தன்குடி - வி. நடராச விராயர்**

## பத்திரகிரியார் புராணம்

*திரைத்தலைய கருங்கடல்நீர் செங்கரத்தின்*
*முகந்தருத்திச் செருக்கார் விந்தம்*
*தரைத்தலையி னுறவழுத்தி வில்வலன்வா*
*தாவியைச்சங் கரித்துப் பைந்தேன்*
*விரைத்தலைய துழாய்மாலைச் சிவலிங்க*
*வடிவாக்கி விண்ணு ருந்தென்*
*வரைத்தலைவீற் றிருந்துநெடுந் தமிழ்விரித்த*
*குறுமுனிதாள் வணங்கி வாழ்வாம்.* **22**

**—கும்பகோணம் - ஆர். சபாபதி பிள்ளை**

## திருக்குற்ருலத் தலப் புராணம்

*கிளையேந்து மணிநிலவு விரிகூடத்*
*திரிகூடக் கிரிக்கே யாவும்*
*விளையேந்து புனல்கரகம் தண்டேந்திப்*
*படைத்தபிரான் விடுத்து நேமி*
*வளையேந்துங் கரத்துமழு மானேந்திப்*
*பசுந்துளவ மவுலிக் காடு*
*முளையேந்து மதியேந்தத் துதியேந்துந்*
*தமிழ்முனிதாள் முடிமேல் கொள்வாம்.* **23**

**—திரிகூட ராசப்பக் கவிராயர்**

## சிதம்பர சபாநாத புராணம்

பரந்தபுகழ் வடமொழிக்குப் பாணினிய
முதற்பலநூல் பண்ணு மாட்சி
விரிந்தபுகழ்த் தமிழ்க்கொருதான் வகுத்தவிலக்
கண நூலே விளக்கும் வாய்மை
நிரந்தபல உருத்திரர்விண் ணவர்முனிவர்
பணித்தபுவி நீங்கித் தென்பால்
இருந்துசமப் படுத்தியறி வுறுத்தருளும்
குறுமுனியை ஏத்தி வாழ்வாம். 24

—சபாபதி நாவலர்

## திருக்கருவைத் தல புராணம்

அதிகபுக ழாரியஞ லாலயமுன்
ஞட்புரிவித் தருணிட் சேப
நதியினிடைச் சிலையுருவா யிருந்தவது
லாம்பிகையை நயந்து மிக்க
துதிகொள்பிர திட்டைபுரி வித்தருளும்
புகழுமிகத் துலங்கப்பெற்ற
பொதியவரைத் தவமுனிவர் பெருமான்பொற்
பதுமிதமும் போற்றுவேமால், 25

தக்கமா தவத்தோய்! இப்பார் சமன்செய
வேண்டு மென்னின்
மிக்கநீ யேகல் வேண்டும் அலதுநா
மேகல் வேண்டும்
இக்கணத் தவருள் உன்னை ஒத்தவ
ரில்லை இன்னே
தெக்கண திசையிற் சென்று சேர்திநீ
யென்ருன் மன்னே. 26

—சொ. வீரப்ப முதலியார்

## திருப்புத்தூர்ப் புராணம்

அகத்தியல அருந்தமிழ்மா மறைமுதனூல்
ஆய்ந்துதமிழ் அவனி மாக்கள்
அகத்தியங்கு பிறப்பொழிந்தின் படைவுறச்சந்
திளந்தென்றல் அளாவும் வெற்பின்
அகத்தியன்நூல் அகத்தியம்தந் தமர்ந்தருளுந்
தமிழ்க்குரவன் அகிலம் போற்றும்
அகத்தியனை அகத்தியல்நை வகலஅறி
வகலநினைந் தடியில் தாழ்வாம். 27

## பெருந்தோட்டத்து அத்தீச்சுரப் புராணம்

தமிழே யாண்டும் உயிர்க்கிதமன்
தருவ தலது கற்கசத்தால்
அமிழ்தே வரினும் பின்முனிதம்
அன்றால் யாரும் யாவும்விழை
தமிழே யாண்டும் பரவுகெனத்
தந்தாங் கனைய இயலெனுமார்
அமிழ்தே அருளும் அகத்தியப்பேர்
ஆசா னடிகள் முடிக்கணிவாம். 28

## சூதவனப் புராணம்

குலைய மாதவ னேகுறு கென்றுகை
தலைய மாதவ வைத்தரன் தன்னுறு
நிலைய மாதவண் டந்த நிறைதமிழ்
மலைய மாதவன் சேவடி வாழ்த்துவாம். 29

—காரைக்குடி - சொக்கலிங்கச் செட்டியார்

## மருதவனப் புராணம்

புவியினகத் திருளொதுக்கி வானெய்தி
யறியவுறு பொருள்கள் காட்டிச்
சவிமருவிப் பொலிபரிதித் தமிழினிது
தோன்றுகுண சயிலந் தன்னைக்
குவிதிரைத்தண் பெருங்கடலை நெடுங்கிரியை
யடக்கிசிறு குடங்கை யானை
நவியமெடுத் திடுபரனுக் குரியவனைப்
பணிகுவதே நமக்கு வேலை. 30

## ஆச்சாபுரத் தல புராணம்

அண்டர்முன் வேண்டவே அம்பு ராசியை
உண்டவன் செந்தமிழ் உகந்த சிந்தையான்
மண்டலம் புகழ்ந்திடு மலய மாதவன்
புண்டரீ கப்பதம் போற்று வாமரோ. 31

—கொட்டையூர் - சிவக்கொழுந்து தேசிகர்

## புலியூர்ப் புராணம்

உருள்பெருந் தேர்க்கச் சாணி யொப்பவ
ருடைத்தால் இந்தத்
திருநில முருவு கண்டு சிறிதுமங்
கவரை யெள்ளா
தொருவுதல் வேண்டு மென்றுங் கொலிகடல்
பூமி விந்தந்
தருமிகைப் பாடு போக்குந் தமிழ்க்குறு
முனிதாள் போற்றி. 32

—தெல்லிப்புழை - சிவானந்தையர்

## திருத்துருத்திப் புராணம்

ஒருவரைமண் புகவழுத்தி ஒருவரையுட் குறமொழியா
ஒருவரைமேற் கவித்தபச்சை ஒருவரையை வரிசிலையா
ஒருவரைகைக் கொளும்பவள ஒருவரையாக் குபுமலைய
ஒருவரைமேல் வீற்றிருக்கும் ஒருவரைஅன் பொடுதுதிப்பாம்.

—திரிசிரபுரம் - மீனாட்சிசுந்தரம் பிள்ளை

## திருமுல்லைவாயில் புராணம்

கருங்கடல் கடைந்தி ரந்து
கடவுளர்க் கூறு நீப்பான்
இரங்கிடா மையின தன்மே
விருஞ்சிலை தொட்டோன் நாணக்
கருங்கடல் தனைவாய்ப் பெய்து
கட வுளர்க் கூறு நீக்குந்
தருங்குலா மலைய மேய தமிழ்முனிக்
கன்பு செய்வாம். 34

—திருமயிலை - சண்முகம் பிள்ளை

## திருவான்மியூர்ப் புராணம்

சகத்தினை வளைதரு கடலுழுந் தளவுறச்
சமைத்து மாந்தியே
இகத்தினில் அரனரு ளின்பொருங் கடியவ
ரென்று மேத்துவான்
மகத்துவ முளவொரு தமிழ்ப்பயிர் நிலத்தலை
வளர்த்த தென்மலை
அகத்திய முனிவரர் அடியிணை முடிவயின்
அமைத்திட் டாமரோ. 35

—அஷ்டாவதானம் - பூவை கலியாணசுந்தர முதலியார்

## கந்த புராணக் கீர்த்தனை

*பரமான தாதி சிவனாதி சத்தியுற் பத்திமுத்தி*
*உரமான பார்வை உருவிந்து நாதத் தொளிர்மவுனத்*
*திரமான சற்குரு தேசிக னூன்றதி டாரித்துறத்*
*தரமாம் அகாரம் உகாரமோங் காரித்துச் சத்தித்ததே.36*

... ... ...

## சிவமலைப் புராணம்

*சகத்தானை யன்றவனை மகவானை*
*யரவாகச் சாற்றுமெய்வா*
*சகத்தானைக் கிரிதுளைத்த தண்டானை*
*யொருபத்துத் தலையானைக்கீ*
*சகத்தானை கொண்டுவென்றோன் தனைப்பரமன்*
*செய்தானைத் தவரிற்செல்யா*
*சகத்தானைப் பரவுதிரு வகத்தானை*
*நித்தமுமஞ் சலிசெய்வாமே.* 37

—அம்பலவாணக் கவிராயர்

## திருப்பாதிரிப்புலியூர்ப் புராணம்

*மலையினில் கடலில் வானினில் பெருமை*
*முனிவரர் வண்மையென் றறிய*
*அலைகடல் பருகி விந்தியம் அடக்கி*
*அயிந்திரம் அகத்தியம் விளக்கித்*
*துலையெனப் பூமி சமஞ்செய்தப் பொதிகைத்*
*துணைவியோ டினிதருள் கொழிக்கும்*
*தலைமைசால் கலசக் குறுமுனி துணைத்தாள்*
*சரோருகம் நாளும்ஏத் தெடுப்பாம்.* 38

—இலக்கணம் - ஸ்ரீ சிதம்பரநாத முனிவர்

## காஞ்சிப் புராணம்

காசியி னின்றும் போந்து கம்பர்தா மருளப் பெற்று
மாசிலாக் கச்சி மூதூர் மன்னிவீற் றிருந்து பூமேல்
ஆசிலாத் தமிழ்ப ரப்பி யருந்தமிழ்க் குரவு பூண்ட
தேசிகன் மலைய வெற்பின் குறுமுனி திருத்தாள் போற்றி.

—சிவஞான சுவாமிகள்

## திருவேற்காட்டுப் புராணம்

இருக்கோல மிடும்பொருளாய் எழும்புடம
ரகவோதை இலக்க ணத்தை
மருக்கோலித் தமிழ்ப்பயிரை வளர்த்துமலை
மகளாரை மருவ நின்ற
பெருக்கோத மவுலிபுனை யருளாளன்
பெற்றியொடு பெறுகல் யாணத்
திருக்கோலங் கண்டுமகிழ் அகத்தியனார்
சரணமலர் சிரமேற் கொள்வாம். 40

—நாகை - சொக்கலிங்க திருமுடிப் பிள்ளை

## திருநெல்வேலித் தல புராணம்

தென்புவித் தாழ்வு நீக்கி
திருத்தமிழ் வளத்தை நீட்டி
மன்புவி மாந்தர் வாழ
மலையமா மலையில் ஈசன்
சொன்மொழிப் படியே வந்த
சுந்தரக் கும்பன் தாள்கள்
என்முடிக் கணிந்தேன் என்னே
இனிக்குறை எனக்குத் தானே. 41

—மதுரை - அழகர்சாமி பிள்ளை

திருவேடகப் புராணம்

நதியு ளேயுயர் சாநவி ஞான்றிழி யிமயத்
துதியு மாமணத் துதக்கிழிந் திடலுநேர் நிறுத்தற்
கதிக மாதவ முனியிவன் என்றரன் அனுப்பப்
பொதியம் மேவிய குறுமுனி அடிசிரம் புனைவாம். 42

இலுப்பைக்குடிப் புராணம்

அள்ளியேழ் கடல்நீர் எல்லாம்
அருந்திமுன் உமையை ஈசன்
ஒள்ளிய மணமு டிப்பான்
உயர்பொதி யக்குன் றேறித்
தெள்ளிய தமிழ்ப்ப யிர்க்குச்
சிறப்பியல் என்னும் மாரி
உள்ளருள் பொங்கிப் பெய்த
உவமையில் முகிலைத் தாழ்வாம். 43

திருக்கானப்பேர்ப் புராணம் (காளையார்கோயில்)

சுத்தமெய் அறிவா னந்த சுந்தரக்
கடவுள் கூடல்
நத்திய சங்கத் தாருள் நக்கீர
ரைநோக்கி
இத்தரை நம்மை ஒப்பான் என்னவாய்
மலரப் பெற்று
முத்தமிழ்க் குரவு பூண்ட முனிவன்தாள்
முடிமேல் கொள்வாம். 44

—தஞ்சாவூர் - சதாவதானம் சுப்பிரமணிய ஐயர்

திருக்காருயில் புராணம்

நகத்தடிவா ரப்புனலின் நனைந்தவர்நோய் மாறவிற்றன்
மகத்துவமோர் அப்பொதியம் வாழ்ந்துசிவை வளர்த்தொளிர்சண்
முகத்தருவின் கலைப்பிழிவாய் மொழிக்கலனால் செவித்தேக்கும்
அகத்தியமா முனிக்கரசின் அடிக்கமலம் முடிக்கணிவாம்.

—தேவகோட்டை சிதம்பரச் செட்டியார்

## ஸ்ரீமத் கூவலப்புரம்
## அன்னதான மகத்துவ புராணம்

*அலைகொள் வாரியை அங்கையில் கொண்டுநன்*
*நிலைகொ ளுந்தமிழ் நீள்நிலத் தோதியே*
*மலைய மால்வரை வைகுங்கு றுமுனி*
*இலகு பாதங்கள் ஏத்திஉய் வாமரோ.* 46

—பால்வனம் பெரிய சுப்பா **ரெட்டியார்**

## திருவதிகைப் புராணம்

*ஒருநொடிப் போதில் வீசும்*
*ஓதநீர் உறிஞ்சி டாது*
*பெருசிலை நாட்டிச் சென்ற*
*பெரியவர் இறும்பூ தெய்த*
*வருதிரை ஓத நீரை*
*வற்றிட உறிஞ்சி நின்ற*
*கருவறு பொதிய வெற்பின்*
*கடவுளை வணக்கம் செய்வாம்.* 47

—திருவதிகை அப்பாவையர்

## பிற பாடல்கள்

*பொதியமுத லாய புனிதநிலை யெல்லாம்*
*புதிய நலங்கள் பொலிய—முதியதவஞ்*
*செய்திருந்த ஐயன்றன் சேவடியைத் தம்மகத்தே*
*பெய்திருந்தார் பெற்றுயர்ந்தார் பேறு.* 48

*திங்கள் வேணியன் தந்த செழுங்கனி*
*மங்கை வள்ளிகை அள்ளிய மாணிக்கம்*
*எங்கள் கற்பக இன்னருள் நீழலில்*
*தங்கு மாமுனி தாள்மலர் சூடுவாம்.* 49

எள்ளிநின்றார் தமக்கெமனாய் ஏத்திநின்றார்க்
கிறையரனாய் இனிய காப்பில்
தெள்ளுபுகழ்த் திருமாலாய் திகழ்படைப்பில்
திசைமுகனாய்ச் சிறந்து தோன்றி
அள்ளிலைவேல் எம்பெருமான் அணிமலர்த்தாள்
அகத்தியைந்த அகத்தி யப்பேர்
வள்ளலிரு மலரடியை உள்ளமுற
நினைந்துதினம் வணங்கி வாழ்வாம். 50

துதியமலை திருமணநாள் வடதிசைதாழ்
வகன்றுசமம் துலங்கிச் சார
மதியமலை நதிச்சடையான் திருவருளால்
அப்பெருமான் மலர்த்தாள் போற்றி
பொதியமலை வீற்றிருத்தல் போலறங்கள்
பொதியமலை போற்செய் நல்லோர்
வதியமலை வகற்றுசிந்தா மணிநகர்வாழ்
குறுமுனிதாள் வணக்கம் செய்வாம். 51

பொன்பூத்த மலர்பூத்த புகழ்பூத்த விதிபூத்த
புவன மெல்லாம்
மன்பூத்த சூர்பூத்த வலிபூத்த அயில்பூத்த
வரதன் பூத்த
தென்பூத்த அருள்பூத்துத் தேன்பூத்த தமிழ்பூத்துத்
திசைக ளெங்கும்
இன்பூத்த இசைபூத்தே எழில்பூத்த குறுமுனிதாள்
இறைஞ்சி வாழ்வாம். 52

ஒருவரைவிந் தியமடக்கி அசுரரிரு வரையடக்கி
உயர்மூன் றிஞ்சி
உருவடக்கி யவர்பூசை புரிந்துயர்நான் மறையடக்கி
யொளிரும் நெஞ்சில்
மருவறவைந் தெழுத்தடக்கிக் கமண்டலத்தில் ஆறடக்கி
வாரி யேழும்
ஒருகரத்தில் அடக்குகும்ப முனியிருதாள் முப்போதும்
உன்னி வாழ்வாம். 53

*சிவக்கட லதனில் எழுந்தபன் னிருகைத்*
*தெள்ளமிழ் தருள்சிறி தடைந்து*
*புவிக்கடல் குடித்துத் தமிழ்க்கடல் விரித்துப்*
*புகழ்க்கடல் பெருக்கிய புனிதத்*
*தவக்கடல் குணத்தின் தனிக்கடல் குடத்தில்*
*தயங்கிய அருட்கடற் கவியாம்*
*அவிக்கடல் படிவார் பவக்கடல் படியார்*
*ஆனந்தக் கடல்படிந் துயர்வார்.* 54

## அகத்தியர் வணக்கம்

*இமிழ்கடல் வைப்பதில் இன்றுள*
*பன்மொழி தம்மிடையே*
*அமிழ்தாந் தமிழதை அள்ளிக்*
*கொடுத்திடெம் ஐய! நின*
*கமழ்சந் தனம்பொதி கைலவெற்*
*பென்னிலே காணுறுங்கால்*
*தமிழ்முனி நீயுமெஞ் செல்வனே*
*காத்திடிந் நாயனையே.* 55

*முனிபவர் முன்னுவ பொன்னல்ல*
*போகமுந் தானுமல்ல*
*தனிமையை வேண்டியே தண்குகை*
*·எய்துவர் தாவிலுல*
*கினிமையை எய்துற இன்பாம்*
*தமிழை இசைக்குருகும்*
*பனிவரை யிற்பொதி வீற்றிருந்*
*தாற்றினுய் பாரெமையே.* 56

---

குறிப்பு:—48 பாடல் முதல் 54 பாடல் வரையுள்ள பாடல்களின் நூல் பெயரும் ஆசிரியர் பெயரும் தெரியவில்லை.

கல்லாலின் கீழன்று கண்டோர்கள்
நால்வர்க்கிக் காவினிடை
சொல்லாமல் சொன்னுனின் மேலான
நின்பணி நீள்புவியில்
நல்லார்க் கிலக்கணம் சோதிட
மாதிய நற்கலைகள்
எல்லார்க்குஞ் செப்பிய எம்முனி
ஏந்துக எம்மையுமே. 57

(அகத்தியரின் வேறு பெயர்கள்)

அகத்திய! கும்ப முனி! தக்க
ணமூர்த்தி! தெய்வமுனி!
இகத்துறு நற்றமிழ் ஆசான்!
குறுமுனி! செந்தமிழின்
சகத்துறு முதலா மாகிரி
யன்!பொதி யாசலவ!
அகத்தெமைக் கொள்பர மாசா
ரிய!குடத் துள்முனியே. 58

—வித்துவான் - அம்பை. சங்கரனர்

——·——

**அம்பை மாநகரில்**

*திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும்*

# ஸ்ரீ அகத்தீச்சுரர் தோத்திரப் பதிகம்

கட்டளைக் கலித்துறை

**காப்பு**

*வடிவுடை யம்பிகை யாடனை*
*யீசன் மணஞ்செயநாள்*
*கடிகமழ் மாமலர் தூவிக்கை*
*கூப்புங் கணபதியைப்*
*படிமிசைக் கும்போ தரர்க்குத்தென்*
*னம்பைப் பதிகஞ்சொலி*
*முடிவுறச் செம்பது மத்தானை*
*நெஞ்சில் முயலுவனே.* 59

*மதியார் சடில ருமையவ*
*டன்னை வதுவைசெய*
*விதியா தியர்தவத் தோர்வரத்*
*தென்புவி மேலிடலாற்*

59. *வடிவு - அழகு. அம்பிகையாள் + தனை - அம்பிகையாடனை. கடி - வாசனை. படி - உலகம். கும்போதரர் - கும்பத்திலிருந்து தோன்றிய அகத்திய முனிவர். கும்பமுனி என்ற வேறு பெயருமுண்டு. பதுமத்தாள் - தாமரைப் பாதம்.*

60. *மதி - சந்திரன். சடிலர் - சடையை உடைய சிவபெருமான். வதுவை - திருமணம். விதி ஆதியர் - பிரமன் முதலிய தேவர்கள். தவத்தோர் - முனிவர்கள், தபோதனர். பொதியாசலம் - பொதியமலை.*

றுதியார் தபோதனர் வேந்தே
  சமன்செயத் தோன்றுகெனப்
பொதியா சலம்வந் துறைந்தாய்தென்
  னம்பைக்கும் போதரனே. 60

ஏரிக்கு ணீருண்ட பூதத்தை
  முன்னுரு வெய்தச்செய்து
மாரிக்கு நேர்கர மன்னவன்
  செய்தவம் வாய்த்ததெனும்
பாரித்த கொங்கை வடமீன்லோ
  பாமுத்ரை பாணிதொட்டுப்
பூரித்து மங்கலம் பூட்டும்தென்
  னம்பைக்கும் போதரனே. 61

காசிப்பெம் மானருட் காட்சிகண்
  டுள்ளங் களித்துவந்து
ஏசிற்செங் குந்தரை மீன
  விழாவெட்டி லெம்மவர்க்கும்
நேசிப்ப *வன்ன மரன்காட்சி
  நல்கிநம் மேந்திழைக்கும்
பூசிக்க வென்றும் புகன்றாய்தென்
  னம்பைக்கும் போதரனே. 62

---

61. ஏரி - சமுத்திரம். நீருண்ட - நீரில் மறைந்த. பூதம் - விருத்திராசுரன். முன் உரு எய்த - வெளிப்பட. மன்னவன் - விதர்ப்பர்கோன். பாரித்த - பருத்த. வடமீன் - அருந்ததி. லோபா முத்ரை - அகத்தியர் மனைவியின் பெயர். பாணி - கை. மங்கலம் - திருமங்கலநாண்.

62. காசிப்பெம்மான் - விசுவநாதர். ஏசு + இல் - குற்றம் அற்ற. மீனம் விழா - பங்குனி மாத விழா.

* அன்னத்தில் பாதச்சுவடும் பிரம்படியும் பெருமான் காட்டுவதாக ஐதிகம்.

பரந்தனை நாடி மலம்மூன்று
நீக்கிப் பகருமறைச்
சிரந்தனிற் சத்வ குணத்தோ
டறிவைச் செலுத்தியையங்
கரந்தமெய்ஞ் ஞானிய ராகின்
னடியர் கழலையல்லாற்
புரந்தரன் வாழ்வெனும் வேண்டேன்தென்
னம்பைக்கும் போதரனே. 63

தங்கப் பிறங்கலை நாரதன்
மெச்சத் தருக்குற்றயன்
றுங்கப் பதிவரை நீள்விந்த
மாகிரி சூள்கெடுத்து
முங்கப் பிலத்தினுள் மீளா
தழுத்து முனிவதமிழ்ப்
புங்கப் புலவர் பொருந்துந்தென்
னம்பைக்கும் போதரனே. 64

மண்ணில்வந் தோர்க்குத்தன் றம்பியை
வில்வலன் வல்லசமாய்ப்
பண்ணிய தோடு பதமட்
டருந்தப் படைத்தயலே
எண்ணிச் செபித்திட வாதாவி
வில்வலனையுமட்டாய்
புண்ணியர் நாளும் பொருந்துந்தென்
னம்பைக்கும் போதரனே. 65

---

63. ஐயம் - சந்தேகம். புரந்தரன் - இந்திரன்.

64. தங்கப் பிறங்கல் - மேருமலை. அயன் - பிரமன். துங்கப் பதி - பிரமலோகம். சூள் - கர்வம். முங்க - தாழ. பிலத்தினுள் - நிலப்பிளப்புள்.

65. அசம் - ஆடு. பதம் - சோறு. அட்டாய் - அழித்தாய்.

அல்லினு மெற்பகற் போதினு
மாசையி லாழ்ந்தமனக்
கல்லினு மீதல் கனவிலுஞ்
செய்யக் கருதிலவா
யில்லினும் நேசித் திளமட
வார்செவ் விதழ்பருகிப்
புல்லினு நின்னை மறவேன்றென்
னம்பைக்கும் போதரனே. 66

மின்னார்ந்த தேகத்தை மெய்யென
நம்பி மிகவுநொந்து
பன்னாளும்வீணிற் கழித்துவிட்
டேன்புரி பாவம்விடுத்
தின்னாளி லாவதுன் தாட்போது
தந்தென் னிடர்தவிர்ப்பாய்
பொன்னார் குடிமல்கி வாழுந்தென்
னம்பைக்கும் போதரனே. 67

அல்லற் பிறவிக் கடல்புகுந்
தாசை யலையிற்சிக்கி
வெல்லற் கரிய வினையா
லறிவு விழுங்கப்பட்டேன்
சொல்லற் கரியசு ஞானவள்
ளத்துன் றுணையடிசேர்
புல்லர்க் கிணங்கவை யாதேதென்
னம்பைக்கும் போதரனே. 68

---

**66.** இதழ் - வாய். அல் - இரவு. எல் - ஒளி. புல்லி னும் - தழுவினும்.

**67.** மின் ஆர்ந்த - மின்னலைப் போன்ற நிலையில்லாத. இடர் - துன்பம்.

**68.** அல்லல் - துன்பம். சுஞான வள்ளம் - சிறந்த அறிவாகிய தேக்கிடம். புல்லர்க்கு - அற்பரொடு.

நாவாற் றுதிசெய் தறியேன்நல்
லாரொடு நான்பழகேன்
பாவாண ரோதும் பரிசியம்
பேன்பரி பாகமிலேன்
தேவாவென் குற்றம் பிறர்க்கோ
திடாதருள் செய்வையெனிற்
பூவாது காய்பல வொப்பாய்தென்
னம்பைக்கும் போதரனே. 69

வாழ்த்து

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

வேதமது வாழிவிண்ணோர் மேகமது வாழி
வேதியர்கள் வாழிபுவி வேந்தர்களும் வாழி
மாதவர்கள் வாழிகும்ப மாமுனிவன் வாழி
மரக்தவல் லியைவாமம் வைத்தசிவன் வாழி
பூதலமும் வாழிபொதி யாசலமும் வாழி
பொருனைநதி வாழியன்பர் போற்றுமிந்நூல் வாழி
ஆதவன்சந் திரன்செங்குந் தாதிபர்கள் வாழி
யம்பைநகர் வாழியிந்நூ லாக்கியோன்வா ழியவே.70

—இடைகால் - மாரிமுத்துக் கவிராயர்

---

69. பரிபாகம் - பக்குவம். பலவு - பலாமரம்.

70. விண்ஆர் - மேகத்தில் பொருந்திய. வாமம் - இடப்பாகம். பொருனை - தாம்பிரவர்ணியாறு. ஆதவன் - சூரியன்.

# பாட்டு முதற்குறிப்பு அகராதி